## எதுவும் விலகாவிட்டால்

உன்னோடு கூடுமெதுவும் மற்றதிலிருந்து விலகியதே. உன்னோடு இருக்குமெதுவும் உன்னை விட்டு விலகக்கூடியதே. எதிலிருந்தும் எதுவும் விலகாவிட்டால், இவ்வுலகில் இயக்கம் என்பதே இருக்காது. எதிலிருந்தும் எதுவும் விலகி மற்றதுடன் கூடாது. ஒரு நிலையிலிருந்து விலகி மற்றொரு நிலைக்கு எதுவும் செல்லாது. ஏற்றமோ இறக்கமோ, வளர்ச்சியோ, தளர்ச்சியோ எதற்கும் ஏற்படாது. எதிலிருந்தும் எதுவும் விலகாவிட்டால் எந்த வரலாறும், அறிவியலும், புதுமையும் இருக்காது. எது எதிலிருந்து எவ்வளவு விலகி எதோடு எவ்வளவு கூடியது என்ற கணக்கும் இருக்காது. எதிலிருந்தும் எதுவும் விலகாவிட்டால், $-$, $+$, $\rightarrow$, $\leftarrow$, $\leftrightarrow$, $=$, $\approx$, $\equiv$, $\cong$, $\neq$, $<$, $\leq$, $>$, $\geq$ போன்ற குறியீடுகளை மனிதகுலம் வகுத்திருக்காது. தன்னிடமிருப்பது எங்கே தன்னை விட்டு விலகிவிடுமோ என்ற சந்தேகம் எந்த மனிதனையும் ஆட்டிப்படைக்காது. எதிலிருந்தும் எதுவும் விலகாவிட்டால், ஒன்றுக்கொன்று விலகிநிற்கும் முரண்பட்ட கருத்துகள் தோன்றாது. எதிலிருந்தும் எதுவும் விலகாவிட்டால், இது இப்படி இருக்க வேண்டும், அது அப்படி இருக்க வேண்டும் என்ற வாத, விவாதங்களும் தோன்றாது.

விலகல் என்றும் நிலைத்திருக்கும். விலகிப்போவதைக் காண்பதும், விலகிவருவதைக் காண்பதும், விலகிப்போனதாலும், விலகிவந்ததாலும் ஏற்படும் விளைவுகளைக் காண்பதும், ஏன் விலகிப்போனது, ஏன் விலகிவந்தது, எதிலிருந்து எது எப்படி விலகிவந்தது, எதிலிருந்து எது எதைநோக்கி எப்படி விலகிப்போனது என்பதைக் காண்பதும் மனித குலத்திற்கு புதிதல்ல. இவற்றை காண்பதிருந்து, சிந்திப்பதிலிருந்து விலக மனிதகுலத்தால் என்றும் முடியாது. மனிதகுலத்தை விட்டு விலகா விலகலே மனிதகுலம் என்றும் விவாதித்துவரும் விதிகளுக்கும், அறிவியலுக்கும், கணக்குகளுக்கும் அடிப்படை மூலமாகும்.

## விலகினால்தான்

ஒன்றிலிருந்து விலகினால்தான் இன்னொன்று. ஒரு நிலையிலிருந்து விலகினால்தான் இன்னொரு நிலை. ஒரு நிலையிலிருந்து விலகாமல் இன்னொரு நிலையை யாராலும், எதாலும் அடையமுடியாது. ஓரிடத்திலிருந்து விலகினால்தான் இன்னொரு இடம். ஒரு கட்டத்திலிருந்து விலகினால்தான் இன்னொரு கட்டம். ஒரு திட்டத்திலிருந்து விலகினால்தான் இன்னொரு திட்டம். முறையிலிருந்து விலகினால் முறையற்றது. சரியானதிலிருந்து விலகினால் பிழை. உடலிலிருந்து உயிர் விலகினால் மரணம். நன்மையிலிருந்து விலகினால் தீமை. தெளிவிலிருந்து விலகினால் குழப்பம்.

## விலகலைத் தடுத்தால்

ஒன்றிலிருந்தொன்று விலகியோடுவதை தடுத்துத் தேக்கினால் அழுத்தம் ஏற்படும். நீரோட்டத்தை தடுத்துத் தேக்கினால், நீரழுத்தம் ஏற்படும். காற்றோட்டத்தை தடுத்துத் தேக்கினால், காற்றழுத்தம் ஏற்படும். அதாவது, ஓடிக்கொண்டிருக்கும் காற்றைப் பிடித்தடைத்து வைத்தால், அதாவது காற்றோட்டத்தை தேக்கினால் காற்றழுத்தம் ஏற்படும். மின்னோட்டத்தை தடுத்துத் தேக்கினால், மின்னழுத்தம் ஏற்படும். இரத்த ஓட்டத்தை தடுத்துத் தேக்கினால், இரத்த அழுத்தம் ஏற்படும். எண்ண ஓட்டத்தை தடுத்துத் தேக்கினால், மன(எண்ண) அழுத்தம் ஏற்படும். மாறாக, அழுத்தத்தைக் கொடுத்தால் ஓட்டமேற்படும்.

## விலக்கமில்லா ஒருமித்த நிலையை அடைய

ஒன்றைவிட்டொன்று விலகாமல் ஒருமித்திருக்கும் நிலை சமநிலையாகும். ஒன்றுக்கொன்றிருக்கும் விலக்கங்களை விலக்கினால்தான் ஒருமித்த சமநிலையை அடையமுடியும். சமநிலையை விட்டு விலகியவை மீண்டும் சமநிலைக்குத் திரும்புமா, திரும்பாதா என்பது அவை சமநிலையை விட்டு எந்தளவிற்கு விலகியுள்ளன என்பதைப் பொறுத்தது. சமநிலையை அறிந்தால்தான், அவை சமநிலையை விட்டு எந்தளவிற்கு விலகியுள்ளன என்பதை அறியமுடியும். எடுத்துக்காட்டாக:

1. ஆணை விட்டுப் பெண்ணும், பெண்ணை விட்டு ஆணும் விலகாவரை, ஆணும் பெண்ணும் ஒருமித்து ஒரே நிலையில் சமமாக இருப்பார்கள். சமநிலையை விட்டு விலகிய ஆணும் பெண்ணும் சமநிலைக்குத் திரும்புவார்களா, திரும்ப மாட்டார்களா என்பது அவர்கள் சமநிலையிலிருந்து எந்தளவிற்கு விலகியுள்ளார்கள் என்பதைப் பொறுத்தது. தம்மிடையே உள்ள விலக்கங்களை விலக்கினால்தான், ஒருவருக்கொருவர் விலகாமல் ஒருமித்து நிற்கும் சமநிலையை அடையமுடியும்.
2. அதை விட்டு இதுவும், இதை விட்டு அதுவும்' விலகாவரை, அதுவும் இதுவும் ஒருமித்து ஒரே நிலையில் சமமாக இருக்கும். சமநிலையை விட்டு விலகிய அதுவும் இதுவும் சமநிலைக்குத் திரும்புமா, திரும்பாதா என்பது அவை சமநிலையிலிருந்து எந்தளவிற்கு விலகியுள்ளன என்பதைப் பொறுத்தது. அதற்கும், இதற்கும் இடையே உள்ள விலக்கங்களை விலக்கினால்தான், ஒன்றுக்கொன்று விலகாமல் ஒருமித்து நிற்கும் சமநிலையை அவற்றால் அடையமுடியும்.

– திருச்சிராப்பள்ளி சிவஷண்முகம்